சிவமயம்

# குமரகுருபரன்



மலர் 18] 1967-ஞ மார்கழி மீ 1-ம் உ (16-12-67) [இதழ் 12

தனிப்பிரதி 25 பைசா — — வருடச் சந்தா ரூ. 3-00]

## ஆசிரியர் குழு

1. வித்துவான் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் அவர்கள்
ஸ்ரீ காசிமடம் இளவரசு, திருப்பனந்தாள்.

2. திரு. Dr. K. சிவராமன் அவர்கள் M. A.,
சைவ சித்தாந்த தத்துவ விரிவுரையாளர்
காசிச் சர்வகலாசாலை, காசி.

3. திரு. கே. எம். வேங்கடராமையா அவர்கள் M. A. B. O. L.
பிரின்ஸிபால், செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.

4. ராவ்சாஹிப், வித்துவான், திரு. கு. அருணசலக் கவுண்டர்
அவர்கள், தலைமைத் தமிழ் விரிவுரையாளர், ம. தி. தா. இந்துக்
கல்லூரி, திருநெல்வேலி.

5. திரு. பி. செந்தில்நாயகம் பிள்ளை அவர்கள் B. A.,
ஒய்வு பெற்ற மாவட்ட வருவாய் அதிகாரி, புளியங்குடி.

6. திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை அவர்கள் B. A., L. T.
அசிஸ்ட்டண்டு கமிஷனர்.
H. R. & C. E. (Adm) Dept Ramanad at Madura-2.

7. திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள் M. A.
தமிழ் விரிவுரையாளர், காசி இந்துப் பல்கலைக்கழகம், காசி

T. M. குமரகுருபரன் பிள்ளை B. A., B. L.,
நிர்வாக ஆசிரியர்.

## உள்ளுறை


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | நீதிநெறிவிளக்கம் .... | 561 |
| 2. | திருமந்திரம் Tirumantiram ஆரும் தந்திரம் ... | 530 |
| 3. | Hymns of the Tamil Saivite Saints ... | 571 |
| 4. | மணிமொழி விளக்கம் ... | 572 |
| 5. | முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்—உரைநடை .... | 580 |
| 6. | திருவாசகத்தில் ஒரு பெருவாசகம் ... | 582 |
| 7. | திருவாசக அநுபூதி உரை ... | 587 |
| 8. | ஞானப்பழம் .... | 588 |
| 9. | நரசிங்கமுனையரையர் நினைவு வாரணாசியில் புரட்டாசி மாச அன்னம்பாலிப்பு முதற்பொருள் ரூ. 3000 .... | 591 |

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# சந்தா நேயர்களுக்கு அறிவிப்பு

நாளிது மார்கழி மாதத்துடன் "குமரகுருபரன்" பதினெட்டு ஆண்டுகள் நிரம்பி, தைத்திங்கள் முதல் தேதி பத்தொன்பதாவது ஆண்டு எய்துகிருன். தங்களுடைய அன்பும் ஆதரவும் என்றென்றும் பெருகி நிற்கப் பெரிதும் விழைகின்ருன்,

சந்தாப் பாக்கியுள்ளவர்கள் பாக்கியை அனுப்புவதுடன் 1968-ம் வருட புதிய சந்தாவையும் சேர்த்து அனுப்பிக் "குமரகுருபரன்" வளர்ச்சிக்கு சந்தா அனுப்புவதோடு புதுச்சந்தாதார்களும் சேர்த்துத் தந்து மேன் மேலும் ஊக்கமளிக்க வேண்டுகினறேன். சந்தாப் பாக்கியில்லாத நண்பர்கள் வழக்கம்போல் 1968-ம் வருட புதிய சந்தாவை முன் கூட்டியே அனுப்பித் தரவும் கேட்டுக்கொள்கிறேன்.

சந்தா நம்பர் குறிப்பிட்டு எழுதுவதும், முகவரி மாற்றம் உடனுக்குடன் தெரிவிப்பதும் காலதாமதத்தை அகற்றி அலுவலகத்தின் சேவையையும் துரிதப்படுத்தும். புதுச்சந்தாதார்கள், 'புதிய சந்தா' என்ற விபரம் குறிப்பிட்டு எழுதுவது நலம்.

நிர்வாக ஆசிரியர்.

உ
செந்திலாண்டவன் துணை

# தேவார அடங்கன்முறை

( புதிய பதிப்பு )

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் நிறுவிய "பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி" யிற் கண்டவண்ணமும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின் திருவருட் பாங்கின் வண்ணம், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய தேவார மூவர் அருளிச் செய்த

## "தேவாரம் அடங்கன்முறை - தலமுறை"

ஸ்ரீவைகுண்டம் "குமரகுருபரன்" அச்சகத்தில் அச்சாகி 14-1-1968 மார்கழித் திருவாதிரை நாளில் வெளிவருகிறது. உயர்ந்தரக வெள்ளைத் தாளில் பெரிய எழுத்தில், தெளிவாக அச்சிடப் பெற்றுள்ளது. 1600 பக்கங்களுக்கு மேற்பட்டது அடக்க விலையில் பிரசுரிக்கப்பெறுகின்றது என்பதை நேயர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

T. M. குமரகுருபரன் பிள்ளை B. A., B L.
மானேஜிங் டிரஸ்டி
ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடம்
ஸ்ரீவைகுண்டம்.

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# "குமரகுருபரன்"

## பதினெட்டாவது மலரின் பொருளடக்கம்


| பொருள் | | பக்கம் |
|---|---|---|
| அருள் | .. | 351 |
| அறமே அழியாத்துணை | .. | 152 |
| அறிவார் இல்லை | | 313, 350 |
| அன்பு | .. | 337 |
| ஆடிப்பெருக்கு | .. | 407 |
| ஆறும்நூறும் | .. | 501 |
| ஆன்றோர்கள் காட்டிய அருள்மொழி | .. | 293 |
| இறைவழிபாடு | .. | 49 |
| இளையான்குடி ஸ்ரீ மாறநாயனார் புராணம் | | 223, 255, 300 |
| இன்சொல் | .. | 225 |
| உத்தமர் உறவு வேண்டும் | .. | 333 |
| ஊமை தந்த கவி | .. | 286 |
| எல்லாம் அவளே | .. | 121 |
| என்னாளும் இன்பமே | | 414, 449 |
| ஏற்றருள்வாய் | .. | 410 |
| ஒருகால் கும்பிட்டால் போதும் | .. | 89 |
| ஓடக்காரன் | .. | 40 |
| கடற்கரைக் கந்தன் | .. | 277 |
| கடன் | .. | 458 |
| கண்ணுதலான் காதல் | .. | 260 |
| கரிவலன் குளம் | .. | 116 |
| கரும்பும் தேனும் | .. | 199 |
| கற்றதனுலாயபயன் | .. | 257 |
| குமரகுருபரன் பதினெட்டாவது ஆண்டுமலர் தோற்றுவாய் | .. | I |
| கு(ஸ்ரீ)மரகுருபர சுவாமிகள் சரித்திர சார பஞ்சகம் | .. | 483 |
| கொடை | .. | 62 |
| கோலும் குடியும் | .. | 305 |
| சிதம்பரத்தில் தில்லைவாழந்தணர் மாசி — பங்குனி சித்திரை அன்னம்பாலிப்பு | .. | 138 |
| சிதம்பர சுவாமிகளும் பொங்கல் விழாவும் | .. | 157 |
| சிதம்பரம் நடராஜ தீக்ஷதர் — பாடிய பாடல் | .. | 491 |
| சிதம்பரத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு கோ சம்வர்த்தன நந்தனவன நிதி | .. | 506 |

| பொருள் | பக்கம் |
|---|---|
| சிறியேம் சிற்றில் சிதையேலே | .. 183 |
| சீவகசிந்தாமணியில் ஓசைதரும் இன்பம் | .. 123 |
| சேக்கிழார் வைணவரா? | .. 354 |
| ஞானப்பழம் | 397, 445, 497, 534, 588 |
| தகப்பன்சாமி சிவபிரானுக்குச் செய்த உபதேசம் | .. 44 |
| தமிழ்நாட்டில் சைவசித்தாந்த நூல்கள் தோன்றிய வரலாறு | .. 68 |
| தமிழ் புத்திலக்கியப் போக்கு | .. 207 |
| தருமையாதீனம் குருமகா சந்நிதானம் வழங்கியருளிய அருளுரை | 167 |
| தலையாய மனிதன் | .. 85 |
| திருக்குற்றாலத்தில் திருக்குற்றால நாதர் மகா சிவராத்ரி நிதி | ... 236 |
| திருஞானசம்பந்தர் அருளிச்செய்த திரு இயமகத்திருப்பதிகம் | ... 471 |
| திருத்தொண்டர் போற்றி திருவகவல் | ... 401 |
| திருப்பத்தூரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னம் பாலிப்பு | ... 189 |
| திருப்பேரூரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு நிதி | ... 462 |
| திருநணா - பவானியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னம்பாலிப்பு நிதி | ... 367 |
| திருமந்திரம் ஐந்தாம் தந்திரம் - Tirumantiram Tantra the Fifth | 9, 106, 149, 202, 248, 278, 331, 383, 438, 469, 530, 569, |
| திருவாசக அநுபூதி உரை | 94, 136, 182, 231, 265, 318, 360, 411, 457, 504, 544, 587, |
| திருவாசகத்தில் ஒரு பெருவாசகம் | 551, 582 |
| திருவெண்காடர் | .. 585 |
| திருவொற்றியூரில் கலியநாயனார் நினைவு திருவிளக்கு நிதி | .. 415 |
| தில்லைவாழந்தணர் ஆவணி, புரட்டாசி, ஆடல் வல்லான் அபிஷேகப் பரிசு நிதி | .. 557 |
| துன்பக்கடல் | .. 176 |
| துணை | .. 228 |
| தோட்டத்து மாம்பழம் | .. 310 |
| நரசிங்கமுனையரையர் நினைவு வாரணாசியில் புரட்டாசி மாச அன்னம்பாலிப்பு | .. 591 |
| நல்லந்துவனார் | .. 388 |
| நீதிநெறி விளக்கம் | 1, 97, 193, 241, 321, 369, 417; 513, 561 |
| நீத்தார் யார் | .. 129 |
| நெஞ்சத்துள்ளே இறைவன் | .. 127 |
| படகோட்டி | .. 492 |
| பனங்காட்டூர் பரமன் | .. 280 |

| பொருள் | | பக்கம் |
|---|---|---|
| பாம்பினும் கொடியவன் | .. | 364 |
| பிரார்த்தனே | .. | 235 |
| பிறவியின் பயன் | .. | 465 |
| பேரின்பவாழ்வு | .. | 346 |
| மதுரை குற்ருலம் திருவாலங்காடு, திருவாதிரை நாள் பட்டர் படிக்காசு நிதி | .. | 3192 |
| மணிமொழி விளக்கம் | | 375, 428, 523, 57 |
| மாணவர் குறிக்கோள் | .. | 17 |
| முத்துக்குமாரசுவாமி பிள்ளேத்தமிழ் உரைநடை | | 6, 108, 145, 203, 250, 273, 325, 385, 440, 481, 532, 580. |
| முப்பாலில் முரணு | .. | 77 |
| முருகன்பெருமை | .. | 289 |
| முருகா முத்தம் தருக | .. | 341 |
| மெய்யடியாரின் வாழ்க்கைநெறி | .. | 33 |
| யாக்கை நிலேயாமை | .. | 161 |
| யாண்டும் இடும்பை இல | .. | 28 |
| வை(ஸ்ரீ)குண்டம் சோடச விநாயகர் வகையரு நித்திய பூசைநிதி | | 269 |
| வேலும் மயிலும் | .. | 361 |

# Articles in English

| | | |
|---|---|---|
| Why I became a Vegitarian | ... | 11 |
| Hymns of the Tamil Saivite Saints | | 76, 120, 175, 225, 253 304, 359, 412, 442, 503, 522, 571. |
| The Raja of Ramnad Memorial Feeding Charity-in the month of Adi at Varanasi | ... | 95 |
| The Saint who exercised Hospitality even in the worst Penury | ... | 112 |
| All is love | ... | 133 |
| The six enemies of Food | ... | 165 |
| Gora Kumber and Namadeva | ... | 232 |
| Saturn temple of Tirunallar | ... | 266 |
| Satyakama (Jabala) | ... | 297 |
| What is Pranayama | ... | 329 |
| Supermacy of Dharma | ... | 392 |
| Lord Ayyappan | ... | 443 |
| Ganapatya Cult | ... | 486 |
| What is pleasure | ... | 539 |

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# கட்டுரையாளர்களுக்கு ஓர் அறிவிப்பு

'குமரகுருபரன்' பத்திரிகைக்குக் கட்டுரை எழுதும் அன்பர்கள், தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே தெளிவாக எழுதியும், கட்டுரைகள், குமரகுருபரனில் 3 அல்லது 4 பக்கங்களுக்கு மேற்படாமலும், கூடியவரை 'வளரும்' 'தொடரும்' என்றில்லாமல் அவ்வவ் இதழிலேயே முற்றுப்பெறுமாறு எழுதி அனுப்பும்படிக்கும் வேண்டப்படுகிருர்கள். மற்றும் கட்டுரைகளை அனுப்பும் நூல் அஞ்சலில், கட்டுரை அல்லாத வேறு செய்திகளும், கடிதங்களும் எழுதி அனுப்புதல், அஞ்சல் நிலைய சட்டதிட்டங்களுக்கு முரண் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேம்.

நிர்வாக ஆசிரியர்.

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை

# குமரகுருபரன்

மலர் 18 | பிலவங்க ஸ்ரீ மார்கழித் திங்கள் 1ம் உ [16-12-67] | இதழ் 12

## நீதிநெறி விளக்கம்

(கட்டுரை 15)

தொண்டைமண்டலாதீனம் மகாசந்நிதானம்
சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் அவர்கள்
ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் மடாலயம்,
காஞ்சிபுரம்.

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க — தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம்
எற்றே இவர்க்கு நா மென்று

"நம்மிடத்துள்ள செல்வம் மிகக் குறைந்ததே" என்று வருந்துவோர், செல்வத்திலே தம்மினும் மிகக் குறைந்தவரை நோக்கித் தமது செல்வம் பெருஞ்செல்வம் என்று உள்ளத்து உவகை கொள்வாராக!

தம்மினும் பேரளவு கற்றுணர்ந்தவரை நோக்கி, "நாம் கற்றுணர்ந்த கல்வி முற்றும் இவர்கற்ற கல்விக்குமுன் எத் தன்மையதாகும்" (மிகக்குறைந்த அளவினதாகும் என்றவாறு) என்று நினைத்து, முன்னர்த் தாம் கற்றதே பெரிது என்றிருந்த நினைப்பு அழிவாராக!

அகத்தே மகிழ்க, கருதுவது அழிக என்பது தாத்பரியம். அகம் மகிழ்வோரும் கருத்து அழிவோரும் முறையே செல்வரும் கற்றோரும் ஆதலின் அவ்விருதிறத்தாரையும் தாம் என்னும் பொதுப் பெயரால் (தம், தமது) குறித்தார்.

அகம் மகிழ்க, கருத்து அழிக என்பவற்றில் உள்ள வியங் கோள், தாம் என்னும் படர்க்கைப் பெயர்க்கு உரியதாதல் அறிக. வியங்கோள் வினைகள் எல்லாம் படர்க்கைக்கே உரியன வாயிருந்தன.

முன்னிலை தன்மை யாயி ரிடத்தொடு
மன்னுதாகும் வியங்கோட் கிளவி

என்பது தொல்காப்பியச் சூத்திரம்.

அவர் மன்னுதாகும் என்று உணர்த்தியும் பிறரெல்லாம் மன்னுவதாகும் என்று கொண்டு தன்மை முன்னிலை களிலும் வியங்கோள் வினையை ஆளும் வினையில் முளும் பெற்றியராயி னர். ஆகவே சுவாமிநாத தேசிகர், 'திணைபால் இடமெல்லாம் செல்லு மென்ப' எனச் சூத்திரம் செய்தார்.

மெலியார்=செல்வத்தல் குறைந்தோரை உணர்த்திற்று. எல்லாம் என்பது எஞ்சாமை பொருட்டு. என் + து. எற்று அற்று இற்று என்பன போலும் ஒருசொல். எத்தன்மையது என் னும் பொருளது. மிகக் குறைந்தது என்னும் கருத்தில் அமைந் தது. இவர்க்கு=இவரது கல்வியின் அளவுக்கு. கருத்து அழிக= செல்வப் பொருளில், தம்மினும் மெலியாரை நோக்கித் தமது உடைமை பெரிதென்று கொண்டமைபோலக், கல்விப் பொருளி லும், தம் கல்வி அளவினும் குறைந்த அளவினரை நோக்கித் தமது கல்வி பெருங்கல்வி என்று கொண்ட கருத்து அழியக் கடவர். கருத்தழிதல் = உள்ளம் உடைத்தல் - எற்றே = எவ் வளவு தாழ்ந்தது. என்று கருத்தழிக எனக் கூட்டிக்கொள்க.

செல்வருக்குத் திருப்தியும், கல்வியுடையார்க்கு மேன் மேலும் கற்றல் வேண்டும் என்னும் ஆர்வமும் வேண்டுமென்று இதனாற் கூறுவார் என்பது மாபேராசிரியர் குறிப்பு.

அதிகம் கற்றோம் என்று செருக்கு அடையாது பின்னும் பின்னும் கற்றல்வேண்டும் என்பது கருத்து. தாம் கற்றதே பெரிது என்னும் கர்வம், கற்றதைக் கெடுத்தல் அன்றிப் பின் னும் கற்க விடாமை பற்றிக் 'கருத்தழிக' என்றார்.

மிக அற்பம் என்பது தோன்ற, 'எற்றே' என்றார். (இது சு. அ. கு. புலவர்)

''பொறாமை முதலிய தீக்குணங்கள் கெடத் தம்மினுஞ் செல் வமுடையாரை நோக்கி யடங்கவேண்டும் என்பார் 'எழியாரை நோக்கித் தமதுடைமை அம்மா பெரிதென்றக மகிழ்க' எனவும், தாம் கற்றது அமையும் என ஒழியாது மேலுமேலுங் கற்கவேண் டுமென்பார் 'கற்றாரை நோக்கிக் கருத்தழிக' எனவும் கூறினார்.''

எளியார் என்று பாட்டில் இல்லை

எளியாரை என்ற இடத்தில் மெலியார் என்று இருத்தல் வேண்டும்.

''அழுக்கா றொழித்தற்கு உபாயங் கூற வந்தவர், தம் மினுஞ் செல்வரை நோக்கின் ஒரோரு சமயத்தேனும் அழுக்காறு நிகழுமாமென்று கருதி, 'தம்மினும் மெலியாரை நோக்கி........ அகமகிழ்க' என்றும், கல்விப்பொருளை மேன்மேலும் அவாவ வேண்டுமென்பது ஒரு தலையாகலானும், தம்மின் கற்றிலாரை நோக்குமிடத்துச் செருக்குக் கொள்வதற்கு ஏதுவாகலானும், தம்மினும் கற்றாரை நோக்கிக் கருத்தழிக' என்றுங்கூறினர்.'' இதைப்பழைய உரை என்பர்.

உடைமை என்பது ஒருவனது பொருளையும் அப்பொருளை அவன் உடைமையையும் உணர்த்தும். முருகனதுவேல் என்பது முருகனது உடைமையாகிய வேல் என்னும் பொருளை உணர்த்து கின்றது. முருகன் வேலையுடைமை சூரர்குலத்திற்கு அச்சம் தோற்றும் என்பது வேலையுடைமையாகிய தன்மையை உணர்த் தும். முருகன் வேலை உடையனுந்தன்மையன் ஆனான் என்பது, உடைமைத் தன்மை முருகனுக்கு உண்டென்பதை உணர்த்தும். அஃது இங்கு வேண்டற்பாற்றன்று.

வேல் என்னும் உடைப்பொருள் வேறு; அதை யுடைமை வேறு; ஒருவன் அவ்வுடைமைத் தன்மையை உடையனுதல் வேறு. அவற்றுள் ஈண்டு உடைமை என்னும் சொல்லின் பொருளாகிய இரண்டனை மட்டும் கொள்க.

சேனுவரையர் (தொல் : சொல் : 213) "உடையானது உடைமைத் தன்மையேயன்றி உடைப்பொருளும் உடைமை எனப்படுதலின், உடைமையானும் என்பதற்கு உடைப்பொருட் கண்ணும் எனவும் உரைக்க", என்று எழுதியுள்ளதை அறிதல் வேண்டும்.

சேனுவரையர் 'எனவும் உரைக்க' என்றதில் உம்மை இல் லாமலிருப்பதே பொருத்தம்' என்று வித்துவசிரோமணியும் உண்மைத்துறவியுமாகிய புன்னுலைக்கட்டுவன் பிரமஸ்ரீ சி. கணேசையர் அவர்கள் எழுதிய குறிப்புரையில் உள்ளது.

'உடைமைப் பொருட்கண்ணும்' என்று உரை எழுதி விசேடத்தில் 'உடைப் பொருட்கண்ணும் எனவும்' உரைத்ததால் உம்மை இல்லாமலிருப்பதே பொருத்தம் என்றது பொருத்த மாதல் எவ்வாறு?

உடைமைப் பொருட்கண்ணும் உடைப் பொருட்கண்ணும் என எண்ணும்மை வேண்டும். உடைமைப் பொருட்கண்ணும் என உரைத்தலேயன்றி உடைப் பொருட்கண்ணும் எனவும் உரைக்க என்பது சேனுவரையர் உட்கோள் ஆதலின் உம்மை இல்லாமல் இருத்தல் பொருந்தாது.

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை யுடைமை யெமையிகழார்

என்னும் வெண்பாவின் பொருளில், எம்மையுடைமை என்றதற்கு, 'தமக்கு உடைப்பொருளாகிய எம்மை உடையர்' என்று சிற்றுரை உளது.

"உடைமை புணராமை என்புழி இன்னும் ஆனுருபும் விரித்துரைக்க" என்னும் சிற்றுரைக்கு ஈரிடத்தும் இவ்விருபும் விரித்துரைத்தாரும் உளர். இன்னுருபு என்றதால் இன்னும் ஆனும் ஓரிடத்தில் வாரா. வரின் இன்னெனல் உருபாகாது, சாரியையாகும். ஆன் என்பதே உருபாய் நிற்கும்.

மாபாடியத்தில் உடைமையின் என ஏதுப் பொருட்கண் வரும் இன்னுருபும் புணராமையான் என்னும் ஆனுருபும் தொக்குநின்றன" என்று எழுதியதை அறிதல் வேண்டும்.

இவ்வாக்கியத்தில் என்னும் என்றது புணராமை எள்புழி என்றிருத்தல் வேண்டும்.

எம்மையுடைமை என்றதற்கு எம்மையுடையர் என்று பொருள் உரைத்து உடைமை உடையராந் தன்மை என விளக்கு தல் எம் மனோர்க்கு விளங்காதது.

முருகன் வேலினை உடைமை அடியார் எல்லார்க்கும் பாது காவலாகும் என்னுந் தொடரில் உடைமை என்பது உடையனுந் தன்மையைக் குறிக்கின்றதோ? அவனுக்கு வேல் உடைமை என்பதைக் குறிக்கின்றதோ? அவன் வேலை ஏந்தியிருக்குந் தன்மை குறிக்கின்றதோ?

முருகன் உடைமை என் புழி உடையனுந் தன்மை எனலும் வள்ளி முருகன்பாற் காதலையுடைமை என்புழி உடையளாந் தன்மை எனலும் கூடுமோ? கூடின், உணர்வார் எம்மை உடைமை என்புழி உடையராந் தன்மை எனல் கூடும்.

உடைமை என்ற ஒரு சொல்லில் ஐம்பாலுக்கும் உரிய நெறி யில் விரிக்கும் நிலை உளதாமோ? கருங்குறவன் கருங்குறத்தி கருங்குறவர் கருங்குரங்கு கருங்குரங்குகள் என்னும் பண்புத் தொகை நிலைச் சொற்களில் கரியன் கரியள் கரியர் கரியது கரி யன என்னும் ஐம்பாலறியும் பண்பு தொக்கு நின்று பண்பியை உணர்த்தி பின் மொழியாகிய பண்பிக்களோடு கூடிப் பொருள் உணர்த்துகின்றன.

அவ்வாறே உடைமை என்னும் ஒருசொல்வின் இடையில் ஐம்பாலறிவும் ஈறுகளும் ஆம் என்னும் பெயரெச்ச மொழியும் தொக்கு நிற்றல் உண்டோ?

இந் நீதிநெறி விளக்கப் பாடலில் தமதுடைமை என்றதில் உடைமை என்னுஞ்சொல் பெரிதென்னும் சொல்லின குறிப்பால் உடைமைத் தன்மையை உணர்த்தாது உடைப் பொருளையே உணர்த்தும்.

ஒருவன் அன்புடைமையினும் அருளுடைமை பெரிது என் றதில் உடைமைத் தன்மையைப் பெரிதென்றதாகும்.

மக்கட்குப் பொருளுடைமையினும் கல்வியுடைமையும் அவ்விரண்டும் உடைமையும் சாலச் சிறப்பு விளைக்கும். எனலும் அன்னதே.

'தொகுத்த அளவில் சாத்தனுடைமையினும் கொற்றனுடைமை பெரிது' என்புழி உடைமைத் தன்மையைக் குறியாது, உடைப் பொருளையே குறிக்கும்.

"தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை அம்மா பெரிதென்றக மகிழ்க" – உடைப் பொருளில் மெலியாரை நோக்கி வலியார் அகமகிழக் கடவர்.

"தம்மினும் கற்றாரை நோக்கிக் கருத்தழிக
எற்றே இவர்க்குநா மென்று"

என்னும் பகுதியில் ஆசிரியர், தாம் கற்றதையே பெரிதென்று கொண்டு செருக்குறுதல் உலகியலிற் பெரிதுங் காணப்படுதலாலும் செருக்குற்றோரது கல்வி பெருக்குறாது அழிதலாலும் நக்கீரனார் வரலாற்றில் செருக்குற்றழிந்தவாறு விளக்கப்படுதலாலும் வேறு பற்பலர் வரலாறுகள் இத்திறத்தில் கூறப்படுதலாகும் 'இவர் கற்ற அளவிற்கு நாம் கற்ற கல்வியின் அளவெல்லாம் எவ்வளவு சிற்றளவினது என்று கருத்தழிந்து இறுமாப்புறாது இருக்குங் கல்வியைப் பெருக்கஞ் செய்வதற்குத் தம்மினும் கற்றாரை மறவாது நோக்கி நோக்கி தாம் மேன் மேலும் கற்றுக்கொண்டிருத்தல் வேண்டும். அங்ஙனம் கற்பதே கல்விப் பெருக்கத்தையும் ஆக்கும் நுண்மாண் நுழை புலத்தையும் வளர்க்கும்.

கற்போர்க்கு, சொல்லாட்சி, சொல்வைப்பு. சொல்லின்பம், சொற்றின்மை, சொற்சுவை பொருளாழ்ச்சி பொருள்வைப்பு, பொருளின்பம், பொருட்டிண்மை' பொருட்சுவை, செய்யுட்கு உயிராகிய பொருள், செய்யுளாகிய உடம்பொடு புணர்த்துக் கூறும்பொருள் ஒலிப்பொருள் (தொனியர்த்தம்) என்பனவும் பிறவும் உணர்ந்து கற்ற புலமை தலைமைப் புலமையாகும்.

கல்விச் செருக்கால் பலவகைத் துன்பம் உறுதல் உண்மையாதலைப் பல வரலாறுகளிற் காணலாம். அவற்றுள் ஒன்று இது.

அத்திறத்தில் மிக வல்ல நர்க்கீர தேவநாயனார்,

மறையி னந்தமுந் தொடாத தாணிலந்தொடவந்த
நிறைபரஞ்சுடர் நிராமய நிருத்தற்குப் பிழைத்தேன்
சிறிய கேள்வியோர் கழியவுஞ் செருக்குடை யோரென்
றறிஞர் கூறிய பழஞ்சொலென் னளவிற்றேயம்ம.

என்று கழிவிரக்கங்கொண்டு வருந்திக் கூறியவாற்றை பரஞ்சோதி முனிவர் திருவாக்கிற் காண்க.

திருவாலவாய்ச் சிவபரஞ்சுடரை நேர்கண்டு இரங்கிய புண்ணியர்களுடைய எல்லாப் பாபங்களும் சிதைவதற்கு, தீப்பொறி வாய்ப்பட்டழியும் பஞ்சும சின மூண்டதால் சிதையும் மெய்த்தவமும் மருந்தால் ஒழியும் நோயும் உலோபத்தால் அழியும் உத்தம குணங்களும் கதிரவன் தோற்றத்தால் உடையும் காரிருளும் பெருங்காற்றுத் தள்ள உடையும் முகிலும் சிங்கஞ்சீறப் பங்கப்படும் யானையும் இடிதாக்கப் பொடிபடும் குன்றமும் காமநோயாற் கெடும் மதியும் சிவஞானப் பார்வையால் வலிகெடும் (மும்)மலமும், புள்ளரசு சீறப் பொன்றும் பாம்பும் உவமம் கூறிய அம்முனிவர் இவற்றின் முடிவாக மிகக்கொடியதென்னுங்கருத்துப் புலப்பட "செருக்குற அழியும் கற்ற கல்வி போற் சிதையும்" என்றூர்.

"புரையற வுணர்ந்தோர் நூலின்
பொருளினுள் அடங்கி அந்நூல்
வரையறை கருத்து மான
வளர்கருப் புறம்பு தோன்றிக்
கரையமை கல்வி சாலாக்
கவிஞர்போல் இறுமாந் தந்நூல்
உரையென விரிந்து கற்பின்
மகளிர்போல் ஒசிந்த தன்றே"

பரஞ்சோதி முனிவர் நோக்கிய பயிர்நோக்கத்தில் தோன்றிய பாநோக்கத்தில் கொண்ட உவமைகள் பாவலர் எல்லார்க்கும் பாடுவதில் ஆவலை வளர்க்கும்.

இவ்வாறே திரிகூட ராசப்பக் கவிராயர் இத்தகைய பயிர் நோக்கத்தைக் குறித்த கவிநோக்கம் கற்போர்க்கெல்லாம் சொல்நோக்கும் பொருள்நோக்கும் எவ்வாறு அமைதல்

வேண்டும் என்று உணரும் செவ்வாறு புலப்படுத்தும்.

குவவுநீ றணிந்த தென்னன்
கூனென நிமிர்ந்து மாணி
தவமென வளர்ந்து மூவர்
தமிழெனத் தழைத்து வஞ்சர்
பவமெனக் கருவாய் நல்லோர்
பலமென ஈன்றி யாவும்
சிவமெனத் தெளிந்தோர் முத்தித்
திருவென விளைந்த செந்நெல்

(தொடரும்)



# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஆருந்தந்திரம் Tantra the Sixth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., Litt.,

மலர் 18, இதழ் 11-ன் தொடர்ச்சி

### குருவருளின்றி எதுவும் ஆகாது

### Nothing shall come by without Guru's grace

12. திரு வாய சித்தியும் முத்தியும் சீர்மை
மருளா தருளும் மயக்கறும் வாய்மைப்
பொருளாய வேதாந்த போதமும் நாதன்
உருவாய் அருளா விடிலோர ஒண்ணுதே

The Siddhies that are a veritable treasuretrove,
The Mukhti that is salvation finite,
The heavenly Grace that surpaseth doubts and fears
And the Gnana that is of the essence of Vedanta
-All these, an the Master himself doth impart not,
Never, never shalt thou learn them, never.

அட்டாமா சித்திப்பேறும், முத்தியும், தெளிவு பெற்ற தெய்வ அருளும், வேதாந்த மெய்ப்பொருள் ஞானமும் – இவை யனைத்தும் குருபரன் மானிட வடிவில் தோன்றி அருளாவிடில் கைவரப்பெற வியலாதாகும்.

### சக்தி அருளில் ஞானம் எளிதாம்

### Gnana easy with Sakti's Grace

13. பத்தியும் ஞான வைராக்கிய மும்பர
சித்திக்கு வித்தாஞ் சிவோகமே சேர்தலான்
முத்தியின் ஞான முளைத்தலால் அம்முளை
சத்தி யருள் தரில் தானெளி தாமே.

Bhakti and Resoluteness Spiritual
Are the seeds of Siddhies transcendental;
In turn, these leadeth to Sivoham;

And in Sivoham shooteth the Gnana for Mukti,
And that shoot thine easy shalt be
An Sakti but Her Grace bestoweth.

பத்தியும், ஞானவைராக்கியமும் பரசித்திக்கு வித்தாயிருக்கின்றன. அச்சித்தியால் சிவோகம் பாவனை கிட்டுகின்றது. சிவோகம் பாவனையால் ஞானம் பிறக்கின்றது. அந்த ஞானமே முத்திக்கு முளையாயிருக்கின்றது. சத்தி அருளினுல் அந்த ஞானமுளை எளிதில் கைவருதலாகும்.

மனம் இறைவனேடு ஒன்றும்போது, அவனே
வெளிப்படுகின்ருன்

## When the mind is God-centred, He reveals by Himself

14. இன் னெய்த வைத்ததோ ரின்பப் பிறப்பினை
முன் னெய்த வைத்த முதல்வனை யெம்மிறை
தன் னெய்துங் காலத்துத் தானே வெளிப்படு
மன் னெய்த வைத்த மனமது தானே.

This life of pleasures here below
The Lord for thee of yore ordained
That thou mayst the Greater Pleasure attainath;
Where thine mind reacheth to Him in resolve
Then of HimSelf, He revealeth to thee.

சிற்றின்பம் நிறைந்த இப்பிறப்பினை இறைவன் கொடுத்தது, முத்தியாகிய பேரின்பம் பெறுவதற்காகும். மனமானது உறுதியோடு அவன்பால் நின்று, அவனைச்சாரும்பொழுது, இறைவன் தானகவே வெளிப்படுகின்ருன்.

வரி 1. இன் - பேரின்பம்.
இன்பம் - சிற்றின்பம்
4. மன் எய்த - நிலைத்து நிற்க.

---

(தொடரும்)

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 18, இதழ் 11-ன் தொடர்ச்சி]

## IV

## MANIKKA VASAHAR

(Sanskrit form MANIKYA VACHAKA)

86. வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேட னென்பாய் போல
வினையனா னென்றுன்னை யறிவித் தென்னை
யாட்கொண்டெம் பிரானானாய்க் கிரும்பின் பாவை
யனையநான் பாடேனின் றாடே னந்தோ
வலறிடே னுலறிடே னாவி சோரேன்
முனைவனே முறையோநா னான வாறு
முடிவறியேன் முதலந்த மாயினானே.

86 Amid the fruits of deeds I lay. Thou didst thyself reveal
With words of comfort saying "Come, I will destruction deal
To evil fruit of deeds," and thus thou mad'st me all Thy slave.
And yet I stand as if a statue made of steel, nor rave,
Nor sing, nor cry, nor wail–woe's me–nor in my spirit faint
With deep desire, so dull am I. O being ancient,
Thou art beginning, Thou art end: tell me, how can I be
So dead at heart? The end of this I do not dare to see.

(To be continued)

---

Reproduced with the kind permission of Oxford University Press, Calcutta.

(N. B. Copies available for sale at the above Press.)

# மணிமொழி விளக்கம்

சித்தாந்தக் கலைமணி, மகா வித்துவான்,
திரு. சி. அருணை வடிவேல் முதலியார் அவர்கள்,
தருமையாதீனப் பல்கலைக்கல்லூரி பேராசிரியர், தருமபுரம்.

## திருவம்மானை
## 5 - ம் திருப்பாட்டு
### "கல்லா மனத்து"

நான்காமவள் எறிந்த அம்மானையை மற்றொருத்தி தன் கையிற் பற்றிஎறியும் பொழுது பாடுகின்றாள்:—

கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனைத்
தில்லை நகர்புக்குச் சிற்றம் பலம்மன்னும்
ஒல்லை விடையானைப் பாடுதுங்காண் அம்மானாய்

இறைவனை முன்னர்ப்பாடிய மகளிரெல்லாம், மேலுலகத்தார், கீழுலகத்தார் முதலியபெரியோர்க்கும் காணலாகாத அருமையும், தங்கட்கு எளிவந்த அருளின பெருமையும ஆகிய இறைவனது உயர்வையே விளங்கக் கூறித் தங்கள் இழிவினைச் சிறிதே புலப்படுத்திப் பாடினார்கள். ஆனால், இவளோ, தனது இழிவின் மிகுதியையும், அதனையும் போக்கித் தன்னை உயர்த்திய இறைவனது வல்லாண்மையையும் விளங்கப் பாடுகின்றாள்.

மக்களுக்கு,'மனிதர்' என்ற பெயர், மனம் உடைமை பற்றி வந்தது என்பார்கள். மனம் மக்களுக்கு மட்டும் இல்லை; விலங்கு

---

*தருமையாதீனப் பல்கலைக்கல்லூரி பேராசிரியர், சித்தாந்தக் கலைமணி, மகா வித்துவான், திரு. சி. அருணை வடிவேல் முதலியார் அவர்கள், நம் வேண்டுகோளுக்கிணங்கி திருவாசக உரை 'குமாரகுருபரனுக்குத்' தொடர்ந்து உதவ இணங்கியுள்ளார்கள்.*

பறவை முதலிய மற்றைய உயிர்கட்கும்உண்டு. ஆனால், அவற்றின் மனங்கள் தாம் உணவைத்தேடி உண்ணுதற்கும், தமக்குப் பகையாய் உள்ளவற்றிடமிருந்து பிழைத்து வாழ்தற்குரிய வழியை உணர்தற்கும் மட்டுமே உரியவையாய் அமைந்துள்ளன. ஆனால், அவையே மனத்திற்குரிய இயல்புகள் அல்ல. நன்மை, தீமைகளை அறிகின்ற அறிவின் வழியே நின்று பிற உயிர்கள்மேல் இரக்கம் கொள்ளுதலும், உற்றார் உறவினரிடத்து அன்புசெய்தலும், தமக்கு நன்மை செய்தவர்களிடத்து நன்றிபரராட்டுதலும், மூத்தோரிடத்தும், சான்றோரிடத்தும் நன்மதிப்புக் கொண்டு அவர்கள்பால் பணிவு கொள்ளுதலும் முதலியனவே மனத்தின் இயல்புகள். இத்தகைய இயல்புகள் விலங்கு முதலியவற்றின் மனங்கட்கு இல்லாமையால், அவைகட்கு மனம் இருந்தும். இல்லாதன என்றே சொல்லப்படுகின்றன. மனிதர்களது மனம் இத்தகைய பண்புகளைஉடைமையால், அவர்கள் மனம் உடையவர்கள் என்று சொல்லப்படுகின்றார்கள். இந்த மனத்தின் பண்பே, 'மக்கட் பண்பு'என்றும் சொல்லப்படுகின்றது. இம்மனப்பண்பு இல்லாதவர்கள்அறிவினால் சிறந்திருந்தாலும் மக்களாக மதிக்கப்படாமல், மரங்களாகக்கருதப் படுவர் என்பதைத் திருவள்ளுவர்,

> "அரம்போலும் கூர்மைய ரேனும், மரப்போல்வர்
> மக்கட்பண் பில்லா தவர்"

எனக் கடுமையாகக் கூறிக் கண்டிக்கின்றார்.

அன்பு, அருள் என்பன மனத்தின் பண்புகளில் சிறந்தவை. அன்பை இதயம் என்றும், அறிவைத் தலை என்றும் இக்காலத்தார் பொதுவாகக் கூறுவர். அதனால், அன்பில்லாதவர்கள் இதயம் அல்லது மனம் இல்லாதவர் ஆகின்றனர். அன்பற்ற மனம் இளகல் இன்றி இறுகி இருக்கும். அதனால், அப்படிப்பட்ட மனத்தை, 'கல்மனம், இரும்பு மனம்' என்றெல்லாம் சொல்வார்கள். அவ்வாறே இவள் தன் மனத்தை, "கல்லாம் மனம்" என்கின்றாள். ஏன்? இவளது இழிவை எள்ளளவும் பாராது இவள்பால் வந்து கூடிக் கலந்து இவளைத் தனக்கு உரியளாக்கிக் கொண்ட இறைவனது பெருந்தன்மையையும், பேரருளையும் சிறிதும் எண்ணாமலும், எண்ணி உருகுதல் செய்யாமலும்

உள்ளது இவள் மனம். அதனை நினைக்குந்தோறும் இவளுக்கு உண்டாகின்ற சினத்தால், அதனை, "கல்லாம் மனம்" என்று வைகின்றாள். இனிக் 'கல்லா மனம்' என்றே வைத்து, 'நற் பண்புகளுள் ஒன்றையும் 'கல்லாத மனம்' எனக் கூறினாள் என்றலுமாம்.

இங்ஙனம் தன்மனத்தை வைகின்ற இவள் உண்மையி லேயே கல்லா மனத்தவள்தானா என்பது ஆராயத்தக்கது. ஏன்? கல்லா மனத்தை யுடையவர்கள், தங்கள் மனத்தை அப்படிப் பட்டதாகச் சொல்வதும் இல்லை. அறிவதும் இல்லை. அதனால் இவள் கூற்று ஆராயத்தக்கதே.

இவள் உண்மையில், கல்லாமனத்தை உடையவள் அல்லள். ஏனெனில், இறைவன் அன்பரை வந்து ஆட்கொள்வதன்றி, வன்பரை வந்து ஆட்கொள்வதில்லை. கரவாடும் வன்னெஞ் சர்க்கு அரியவன், யாவராயினும் அன்பரன்றி அறியொணு மலர்ச்சோதியான் என்பனபோல அவனைப் பற்றிக் கூறும் வாக்கியங்கள் பல உள. அத்தகையோன் இவள்முன் எளிவந்து தோன்றினான் என்றால், இவள் எங்ஙனம் கல்லா மனத்தளாய் இருத்தல் கூடும்! கூடாது. ஆயின். இவள் ஏன் இங்ஙனம் கூறுகின்றாள்எனின், தனக்கு இறைவன் செய்த திருவருளின் அளவுக்குத் தன்மனம் பண்பட்டதில்லை என்று இவள் நினைக் கின்றாள். ஆம்! உண்டவர்க்கல்லவோ சுவை தெரியும்! அனு பவித்தவர்க்கல்லவோ சுகம் தெரியும்! அதுபோல, இறைவன் திருவருளை நேரே பெற்ற இவளுக்கல்லவோ அந்தத் திரு வருளின் பெருமை தெரிகின்றது! அங்ஙனம் தெரிவதனால், அவன் திருவருளின்முன் நம் அன்பு எவ்வளவினது என்று நினைக்கின்றாள். அதனால், அவனையே நினைந்து உருகும் தனது உள்ளத்தையே, 'கல்லாம் மனம்' எனக் கூறி அவலம் எய்து கின்றாள். எம்போலியராயின், நான் எத்துணை அன்பு செய் தேன்! எத்தனைப் பணிகள் புரிந்தேன்! வழிபாடுகள் செய்தேன்! பாடினேன்! பரவினேன்! மந்திரம் செபித்தேன்! இவ்வளவு செய்தும் அந்த இறைவன் இரங்கவில்லை. அவன் மனம் என்ன கல்லோ என்று இறைவனது நெஞ்சத்தைத்தான் குறை கூறு வோம். நம்முன் அவன் ஏன் வரப்போகின்றான்!

தன்மனத்தைக் கல்லாம் மனம் என்று கூறினமையால், தன்னைப் பலரினும் கடைப்பட்டவளாகவும் கூறுகின்றாள். மனப் பண்பு இல்லாதவர்களை 'மரம்' என்று திருவள்ளுவர் கூறுவர் என்பதை முன்னே கண்டோமன்றோ! எந்த அளவிற்குக் கடைப் பட்டவள் என்கின்றாள்? 'நாயின் அளவுக்குக் கடைப்பட்டவள்' என்பதற்கு, "கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை" என்றாள். நாய்க்கு நல்லமனம் இல்லை. அது, தன் இனத்தோடே பொருந்தி வாழாத சீற்றமும்' பகையும் உடையது. "பொற்கலத்து ஊட்டிப்புறந்தரினும் நாய் பிறர் – எச்சிற்கு இமையாது பார்த்திருக்கும்" என்பது நீதிவாக்கியம். நாய் குரைப்பதைப் பொருளற்ற ஓசையாகவே பலரும் கூறுவர். தனக்குச் சோறிட்டவனிடத்து நன்றி பாராட்டுதல் ஒன்றே அதனிடத்துள்ள நற்குணம். அதனை நினைக்கும்பொழுது, 'நாயினும் கடையேன்' எனக் கூறும் வழக்கம் உண்டு. ஆயினும், அஃது ஒன்றைத் தள்ளிப்பார்க்கும் பொழுது நாய் எல்லாவற்றினும் கடைப் பட்டதேயாம். ஒருவனை, 'நாயே' எனின், அவன் தன்னை மிகவும் இழித்துரைத்ததாகக் கொண்டு சினங்கொள்வதன்றித் தன்னை நன்றியறிவுடைய பெருமகன் எனக் கூறியதாக நினைத்து மகிழ்ச்சியுறுதல் எங்கும் யாரிடத்தும் இல்லை. அதனால், நாய் இழிந்ததொன்றாகவே கருதப்படுதல் தெளிவாகும்.

"இருப்பினும் நாயிருந் தற்றே இராஅ
துணப்பினும் நாய்குரைத் தற்று"

என்றாற்போலும் இடங்களிலெல்லாம் நாய் இழிவுக்கே உதாரணமாகக் காட்டப்படுதல் காணலாம். அதனால் இவளும், "கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை" என்று கூறிக்கொள்கின்றாள்.

இங்ஙனம் கடைப்பட்ட தன்னை இறைவன் என்ன செய்தான் என்கின்றாள் ? 'பித்தேற்றிவிட்டான்' என்கின்றாள். என்ன பித்து ? அவனையே நினைத்துப் பிதற்றுகின்ற பித்துத் தான்.

இப்பித்தினால், அவள் மனம் கல்லாய் இருந்த நிலைமாறிக் கனியாகிவிட்டது என்பதுடன், இஃதென்ன ஓர் மாயவித்தை என்கின்றாள். சிறிதும் இளக்கம் இல்லாத – பிளக்கினும் பிளவாத கருங்கல்லை, கனிந்து, அளிந்து சாறு பிறிட்டொழுகும்

கனியாகச்செய்வது எப்படி ? அதனை நாம் அறியோம். அவன் ஒருவனே அந்த வித்தையை அறிவான். அதனால் அவன் வல் லாளரினும் வல்லாளனேயாம். அவ்வல்லாளன் இருப்பதும் நம் திருப்பெருந்துறையே என்பதற்கு. "வல்லாளன் தென்னன் பெருந் துறையான் பிச்சேற்றிக் கல்லைப் பிசைந்து கனியாக்கி" என்றாள்.

கற்போன்ற மனத்தைக் கனிபோல ஆக்கிய அவன், பின் னர் என் செய்தான் ? தன் கருணைவெள்ளத்து அழுத்தி வினை கடிந்தானும். 'கருணை' என்றது, அதனால் தரப்படும் பேரின்பத் தையே குறிக்கும். இப்பேரின்பம் காலளவும், கழுத்தளவுமாய் அரைகுறையாகாது தன்னை முற்றிலும் மூழ்க ஈர்த்துக்கொள் கின்ற பெருவெள்ளமாய்ப் பெருகிற்று என்பதை "வெள்ளத்த ழுத்தி" என்பதனால் அறிகின்றோம். வெள்ளத்தில் மூழ்கின வர்கட்கு வினையேது! சொல்லேது! நினைவேது! எல்லாம் வெள் ளமயம். இவளுக்கு, எல்லாம் இன்பமயம்.

இப்பேற்றினைத் தந்த வேதியக் கோலத்தை இவள் மறக்க வில்லை யாதலால், "வினைகடிந்த வேதியனை" என்கின்றாள். திருப் பெருந்துறையில்வந்து, இவளுக்குப் பிச்சேற்றித் தன் கருணை வெள்ளத்தழுத்தி வினைகடிந்த வேதியன் பின் என் ஆனான் ? 'தில்லைநகரிலே புகுந்து திருச்சிற்றம்பலத்திலே நிலைபெற்று விட்டான' என்பது "தில்லைநகர் புக்குச் சிற்றம் பலம் மன்னும்" என்பதனால் குறித்தாள். இவ்வாறு அவன் விரைய வருவதும் விரையப் போவதும் எவ்வாறு என்பார்க்கு, அவனது ஊர்தி எருதுதான். ஆனாலும், அது மற்றைய எருதுகள் போன்றதன்று; அவன் நினைத்த இடத்திற்கு நினைத்த அளவில் விரையச் செல் லும் பாய்விடை என்றதற்கு, "ஒல்லை விடையானை" என்று சொல்லி இத்தன்மை யோனையே நாம் பாடுதல் வேண்டும் என்றற்கு, "பாடுதுங்காண் அம்மானாய்" என்று அம்மனைக்காயை எறிந்தாள். "பெருக்கத்து வேண்டும் பணிதல்"என்றும்,'பணியுமாம்என்றும் பெருமை' என்றும் கூறிய மெய்மொழிகட்கேற்ப, இவள் பெறற் கரும் பேற்றினைப் பெற்ற பெரியளாய் இருந்தும், செருக்குறாது, தனது குறையை எண்ணி எண்ணிப் பணிந்து நிற்கும் நிலை யைக் கண்டு ஏனையோர் இவளை உள்ளத்துள்ளே நன்குமதித்துப் பாராட்டினர்.

## 6 – ம் திருப்பாட்டு

### "கேட்டாயோ தோழி"

ஐந்தாமவள் எறிந்த அம்மனையை மற்றொருத்தி பிடித்துப் பாடி எறிகின்றாள்:—

கேட்டாயோ தோழி கிறிசெய்த வாறொருவன்
தீட்டார் மதில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
காட்டா தனவெல்லாம் காட்டிச் சிவம்காட்டித்
தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி
நாட்டார் நகைசெய்ய நாம்மேலை வீடெய்த
ஆட்டான்கொண் டாண்டவா பாடுதுங்காண் அம்மானாய்.

முன்னே பாடிய மகளிர் பலரும் இறைவன் தங்களுக்குச் செய்த நலத்தையே பாடி அவனைப்போற்றி இன்புற்றார்கள். இவள் அவ்வாறின்றி, அவன் தன்னைக்கூடிக் கலந்து பின் கைவிட்டான் என அவனைத் தூற்றி துன்புறுகின்றாள். அதனால், தன் முன்நிற்கின்றவருள் ஒருத்தியை, 'ஏடி தோழி' என விளித்து 'ஒருவன் என்னிடத்து வஞ்சனைச் செயல் செய்த வகையைக் கேட்டாயோ' என, அவளைக் கேட்குமாறு செய்கின்றாள். கிறி - வஞ்சனை.

அவள், யாரேடி அவன் ? எனக்கேட்ப, 'நம் திருப்பெருந் துறைத் தலைவன்தான்' என்பாள், "தீட்டார் மதிப்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்" என்றாள். அவனுக்கு இவ்வுலகில் உள தாகிய புகழை நினைக்குந்தோறும் இவளுக்குச் சினம் மிகுகின்றது. 'அவன் அருள்மிக்கவன், மெய்யே வடிவமானவன், அறவாழி அந்தணன்' என்றெல்லாம் எங்கும், யாவரும் புகழும் புகழ்ச்சியை இவள் அவனது ஊர்மேல் இட்டு, "தீட்டார் மதில் புடைசூழ் தென்னன் பெருந்துறையான்" என்றாள். திருப்பெருந்துறை உயர்ந்த மதில்களால் சூழப்பெற்றிருக்கின்றதாம். அதனால், பலகாவத தூரத்தில் உள்ளாரும் இனிது காணும்படி அத்தலம் உயர்ந்து தோன்றுகின்றதாம். மேலும் அம்மதில்கள் மீது தீற்றப்பட்ட வெள்ளிய சுதையால், அந்நகரம் மறுவற்ற பாற்கடல் போன்ற வெள்ளொளியை நெடுந்தூரம் வீசுகின்றதாம். இத்தலம் இத்துணைச் சிறப்புடையதாய் இருந்தால்தான் என்ன? இதற்குத் தலைவன் என்னும் வகையில் அவனை உல

கத்தார் எல்லாம் மேற்கூறியவாறு பலவகையாகப் புகழ்ந்தால் தான் என்ன? அவனிடத்தில் உண்மை இல்லையே! வஞ்சனை யன்றோ காணப்படுகின்றது என்பதை மறைமுகமாகக் கூறு கின்றாள்.

இதுகாறும் அவனைப் பலப்பல வகையாக வெறுத்துப் பேசுவதிலேயே இவள் காலம் கழிப்பதைக்கண்டு, முன் நின் றவள், 'அவன் செய்த வஞ்சனை இது என்பதைச் சொல்லாமலே இத்துணையும் பேசுகின்றாய்; அவன் செய்த வஞ்சனையைச் சொல்லடீ' என்று கேட்க; இவள், 'உலகில் உள்ளார் இன்பம் இன்பம் என்று சொல்லி நுகர்கின்ற இன்பங்களெல்லாம் என்ன இன்பம் என்பதைப் பார்' என்று அவற்றின் தன்மைகளை எல் லாம் எனக்கு நன்குணர்த்தி, அவை எல்லாம் இன்பமாகா என வெறுக்கப்பண்ணினான்' என்பதை, "காட்டாதன எல்லாம் காட்டி" என்றும், 'தனது மெய்யான தன்மையை யான் இனிதுணரும்படி அருளினான்' என்பதை, "சிவம் காட்டி" என்றும், 'அம்மெய் யான தன்மையுள்ளே யான் ஒருபுடை அடங்கிக் கிடக்குமாறு என்னைத் தன்னுள் அழுந்தப் புல்லிக்கொண்டான்' என்பதை, "தாள் தாமரைகாட்டி" என்றும், 'இங்ஙனம் அவன் என்னைப் புல் லிக்கொண்டு தலையளி செய்த அளவில் எங்கும், யாரும் கண் டறியாத எல்லையில்லாத இன்பத்தை யான் எய்தினேன்' என் பதை, "தன் கருணைத் தேன்காட்டி" என்றும், 'இத்தகைய இன் பத்தை எய்தினமையால் யான் அன்னையையும், அத்தனையும் அன்றே நீத்து, அகலிடத்தாருள் ஒருவரையும் மதியாது, அவ னையே நினைந்து, அவன் வரவு ஒன்றினையே எதிர்நோக்கி இருத்தல் கண்டு, யாவரும் என்னை இகழ்ந்து பேசத் தொடங் கினர் என்பதை, "நாட்டார் நகை செய்ய" என்றும், 'அவர்கள் அவ்வாறு இழித்துரைத்தலால் நமக்குக் கெடுவது என்! நம்மை நம்பெருமான் ஒரு ஞான்றும் கைவிடாது, உம்பரினும் மேலான இடத்தில் வைத்து உயர்வு செய்வன் என்னும் துணிவோடு இருந்தேன்! என்பதை, "நாம் மேலைவீடெய்த" என்றும், 'இங்ஙனம் துணிவோடிருக்கும்படி ஒருநாள் வந்து ஆண்டதுதான் கண்டது; ஆனால், அன்றுமுதல் இன்றளவும் அவனை யான் மீளக் கண்டிலேன்; இனியாயினும் வருவான் என்பதற்கு ஏது என்னுளது! அதனால் அவன் செய்த இவ்வஞ்சனைச் செயலைப்

பலரும் அறிய இதுபொழுது நாம் பாட்டாகப்பாடி ஆடுவோம்' என்பதை, "ஆள்தான் கொண்டு ஆண்டவா பாடுதுங்காண் அம்மானாய்" என்றும் கூறி அம்மனைக்காயை எறிந்தாள்.

இங்ஙனம் கூறியதிலிருந்து இவள் பெருந்துறைப் பெருமானைப் பெரிதும் வெறுக்கின்றாள் என்பது பொருளன்று. மற்று அவனிடத்துள்ள ஆளிக்காதலால் ஆற்றாமை மீதாரவே இவ்வாறெல்லாம் தன் தோழியர்முன் நாண் விடுத்து எல்லாவற்றையும் அவர் அறியப் பேசுகின்றாள். அவன் காட்டின பலவற்றையும் ஒருதொடராகக் கூறாது, "காட்டாதனவெல்லாம் காட்டி", "சிவம் காட்டி", "தாள்தாமரை காட்டி", "தன் கருணைத் தேன்காட்டி" எனப் பல தொடர்களால் வகுத்து வகுத்துக் கூறியது, அவன் தனக்குச்செய்த திருவருளின் அருமையை நினைந்து நினைந்து நெக்குருகும் தன்மையினாலன்றோ?

'சிவம்' என்பது, 'மங்கலம்' என்னும் பொருளைத் தருவது. மங்கலமாவது அழிவின்மை. எனவே, 'மெய்ப்பொருள்' என்பது கருத்தாயிற்று. 'உயிர்கள் இறைவன் திருவடி நிழலில் தங்குதல்' என்பது, அவனது பெரியவியாபகநிலையுள் அடங்கிக் கிடத்தலைக் குறிப்பதாகும். "நாட்டார் நகைசெய்ய, நாம் மேலை வீடெய்த" என்றதனால், நாட்டாரது நகை அறியாமை காரணமாக நிகழ்வது என்பதும், அதனால், அதனைப் பொருட்படுத்தி மேலை வீட்டினை எய்தா தொழிதல் கூடாது என்பதும் பெறப்பட்டன. மேலை வீடு - மேலான முத்தி. இது 'பரமுத்தி' எனப்படும். நாட்டாரது நகையினைப் பொருட்படுத்தாது, பரமுத்தியையே நாடுகின்றாள் எனின், இவளது உயர்நிலை சொல்லும் தரத்ததோ! ஆட்கொண்டு ஆளுதலாவது, தனக்கு அடிமையாகக் கொண்டு பணிகொள்ளுதல்.

இறைவன் தன்னை முன்னர்க் கலந்து நீங்கிப் பின்னர் வாராதொழிந்த பிரிவாற்றாமை காரணமாக இவள் இங்ஙனம் வருந்திப் பாடியதற்குப் பயன் யாதேனும் உளதாகுமோ எனின், உளதாகும். அஃதாவது, அப்பெருமான் இவளை விட்டு நீங்கியிருப்பவன் அல்லன். என்றும் இவளோடு உடன் இருப்பவன் தான். அதனால், அவனைச் சிறைப்புறமாக நிற்கும் தலைவன்

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்

## உரைநடை



பாலகவி வயிநாகரம்,

திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,

தேவகோட்டை.

(மலர் 18. இதழ் 11-ன் தொடர்ச்சி)

பற்றுவிற் காமன் கொடிப்படைக் கூரெலாம்
படைவிடு கயல்கடாவும
பழனங்க ளோவத்ர சாலிபூஞ் சோலைப்
பரப்பெலாங் காற்றேரொடும்
கொற்றவங் கங்குற் கடாயானை யுங்கட்டு
கூடமே யெனினுமருதக்
கோமகன் குடிகொண்ட சோணாட சேணாடு
குங்குமங் கொட்டு திண்டோட்
பொற்றடங் குன்றிரு கொங்கைப் பொருப்புமொரு
பூங்குழற் காடும்வெயில்கால்
புனைமணிக் கலையல்குன் மாக்கடலு மேந்தியொர்
புனத்தின்கண் மிகநுடங்கும்
சிற்றிடைக் கொல்குமென் கொடிபடர நின்றவன்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. 97

கையிலே பிடித்த வில்லையுடைய மன்மதனது கொடியை யுடைய படையாகிய மகளிருக்கு ஊர்களனைத்தும் படைவீடுகள்.

---

(முன்பக்கத்தொடர்ச்சி)

எனக்கூறலாம். ஆகவே, இவளது பாடலை அவன் கேட்டு இவள்முன் தோன்றி, அவள் விரும்பிய வண்ணமே வரைந்து கொண்டு, தனது மேலை விட்டிற் சேர்த்துக்கொள்வான். என்னை? பலரும் கூறுமாறு, அவன் அருளாளனேயாதலின். ஆற்றாமை மிகுதியால் அவன் தன்னைக் கைவிட்டான்போல இவள்பாடினும், அவனது அருட்டன்மையை இவளும் நன்கறிந்தே இங்ஙனம் பாடினாள் என்க. (தொடரும்)

கயல் மீன்கள் துள்ளியெழுகின்ற வயல்களோ படைக்கலச் சாலைகள் பூஞ்சோலைப் பரப்புக்கள் எல்லாம் தென்றற்காற்றாகிய தேரோடு வெற்றியையுடைய அழகிய கங்குலாகிய கடாயானை கட்டுங்கூடம்: என்றாலும் மருதநிலக் கடவுளாகிய இந்திரன் குடியிருக்கின்ற சோழநாட்டை யுடையவனே! பெருமை பொருந்திய குங்குமம் செறிந்த வரிய தோள்களாகிய பெரிய பொன் மலையில், இரண்டு கொங்கை மலைகளும் ஒரு பூமுடித்த கூந்தற் காடும் ஒளி வீசுகின்ற மணிபுனைந்த மேகலையை யுடைய அல்குற் பெருங்கடலும் கொண்டு ஒரு தினைப்புனத்தில் மிகுதியாகத் துவண்ட சிற்றிடைக்கு வருந்துகின்ற மெல்லிய வள்ளிக் கொடி படர நின்றவனே! சிறுதேரை யுருட்டியருளுவாயாக. எல்லாச் செல்வங்களும் பெருகும்படி தழைக்கின்ற கந்தபுரியில் எழுந்தருளியுள்ள இளங்குமரனே! சிறுதேரை யுருட்டியருளுவாயாக.

கோல்பாய் பசும்புண் ணசும்புகும் பத்தடங்
குன்றுகவுண் மடைதிறந்து
கொட்டுநெட் டருவியொடு தேனருவி யுந்திரை
கொழித்துடன் கோப்பமேதிப்
பால்பாய் பெருக்கா றுவட்டெழுத றன்றுணைப்
பாவைய ரொடுங்குறுகுமப்
பாகீ ரதிக்குநிகர் தண்டுறை தொறுந்திசைப்
பாலர்மேற் படையெடுத்து
வேல்பாய் நெடுங்கட் கடற்றானை யொடுமொருவன்
மேற்செல்ல நாற்றிசையிலும்
வெற்றிக் கயற்கொடி யெடுத்தென வெடுத்தெறியும்
வெண்டிரை கிழித்துவெடிபோம்
சேல்பாய் தடம்பணை யுடுத்தகா விரிநாட
சிறுதேருருட்டியருளே.
திருவளர் வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. 98

அங்குசம் பாய்ந்ததாலுண்டாகிய பசிய புண்கள் பொருந்திய மத்தகத்தை யுடைய பெரிய மலைபோன்ற யானைகள் கவுள் மடையைத் திறந்து கொட்டுகின்ற மதநீராகிய பெரிய அருவி

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# திருவாசகத்தில் ஒரு பெருவாசகம்

[மலர் 18, இதழ் 11-ன் தொடர்ச்சி]

(11) இத்தொடரின்கண் வரும் 'அணு' என்னும் சொல் ஆன்மாவைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். ஆணவமலத்தின் சேர்க்கையால் உயிர் தன்னுடைய வியாபகத் தன்மை குன்றி அணுவைப் போன்று குறுகிய தன்மையை அடைதலில், உயிர் களுக்கு 'அணு' என்றும் ஒரு பெயர் வழங்கும்.

(12) 'சென்று சென்று தேய்ந்து தேய்ந்து' எனவரும் தொடர்களுக்குப் பலவகையில் பொருள்கள் கொள்ள வாய்ப் புண்டு. அவைகள் இறைவன் மிகமிக நுண்ணியனுதலை உணர்த்துகின்றன என்பது ஒரு கருத்து.

ஆன்மாக்கள் படிப்படியாக வெவ்வேறு பிறவிகளையும் நிலைகளையும் அடைந்து முடிவில் இறைவனை அடைகின்றன என்பதனை உணர்த்துகின்றன என்பது பிறிதொரு கருத்து.

'சென்று சென்று' என்பது உயிர்களின் உலகப்பற்று நிலை யையும், 'தேய்ந்து தேய்ந்து' என்பது உயிர்களின் இறையருட்

---

(முன் பக்கத்தொடர்ச்சி)

யுடன், தேனருவியும் அலைகளை வீசி உடன் சேர, எருமைகளி னது பால் பாய்கின்ற பெரிய ஆறும்கூடிப் பொங்கியெழுவது, தனது துணைப் பாவையர்களாகிய கரிய நீரையுடைய யமுனை யுடனும் செய்ய நீரை யுடைய சோணையுடனும் வருகின்ற வெள் ளிய நீரையுடைய கங்கையை யொத்த தண்ணிய நீர்த்துறைகள் தோறும் திசைக் காவலர்களின் மேற் படையெடுத்து வேலைப் போலப் பாய்கின்ற நீண்ட கண்களையுடைய மிகுதியாகிய மக ளிர் சேனையுடன் மன்மதன் மேற் செல்லுவதற்கு நான்கு திசை களிலும் வெற்றியைத் தருகின்ற கயல் மீன் கொடியை உயர்த் திநற்போல வீசி யெறிகின்ற வெள்ளிய அலைகளைக் கிழித்து உயரத் துள்ளுகின்ற சேல் மீன்கள் பாயும் அகன்ற வயல்கள் சூழ்ந்த காவிரி நாட்டை யுடையவனே! சிறு தேரை யுருட்டி யருளுவாயாக. எல்லாச் செல்வங்களும் பெருகும்படி தழைக் கின்ற கந்தபுரியில் எழுந்தருளியுள்ள இளங்குமரனே! சிறு தேரை யுருட்டி யருளுவாயாக. (தொடரும்)

பற்று நிலையையும் குறிப்பதாகவும், இவற்றைக் கொள்ளுதல் கூடும்.

இனி, மலப் பிணிப்பு நிலையில் இறைவன் உயிர்களின் பின்னே சென்று சென்று 'புறம் புறம் திரிந்த செல்வமே' என்றாற்போல ஆட்கொள்ளுகின்றான்; அருட்பற்று நிலையில் உயிர்கள் இறைவன் பின்னே செல்லத் தலைப்பட்டுத் தம்முடைய குற்றங்கள் எல்லாம் தேய்ந்து தேய்ந்து ஒழிய உய்தியும் உயர்வும் பெறுகின்றன என்னும் உண்மையையும், இத் தொடர்கள் உணர்த்துவதாகக் கொள்ளலாம்.

உற்கைதரும் பொற்கை யுடையவர்போல், உண்மைப்பின்
நிற்கை அருளார் நிலை.

எனவரும் திருவருட்பயன் செய்யுளும், ஈண்டுச்சிந்தித்து உணர்தற்கு உரியது.

தூலதேகம், சூக்குமதேகம், காரணதேகம் என்பனவற்றிலெல்லாம் சென்று சென்று அணுத்தன்மை இத்தகையதென்று அறிந்து அழுந்தி, சீவபோதமும் கன்ம நுகர்ச்சியும் ஆகியவை தேய்ந்து தேய்ந்து குறைந்தொழிய, உயிரானது சிவபரம் பொருளோடு ஒன்றுசேரும் நிலையை இத்தொடர்கள் குறிப்பிடுகின்றன எனவும், நாம் கொள்ளுதல் அமையும்.

கானல்நீர் கண்டு மயங்கி இங்கு மங்கும் எங்கும் ஓடி அலையும் மான்கணம் போல, உயிர்கள் இன்பம் என்று எவ்வெவற்றையோ பிறழ உணர்ந்து பெரு மயக்குற்று அலைந்து திரியும் இயல்பினைச் 'சென்று சென்று' என்றும்; பின்னர் அவைகளே தாம் இன்பமெனக் கருதிய பொருள்கள் துன்பமாதலை அநுபவித்து உணர்ந்து தாம் அவற்றின்பாற்கொண்ட அவாவும் பற்றும் முறைமுறையே கழியப்பெறுதலைத் 'தேய்ந்து தேய்ந்து' என்றும் குறிப்பிட்டதாகக் கொள்ளுதலும் பொருந்தும். சென்று சென்று திரிதல் 'ஆரா இயற்கை அவா'; தேய்ந்து தேய்ந்து கழிதல் 'அவா நீத்தல்', அந்நிலையே பேரா இயற்கை பெறுதல் 'ஒன்றுதல்'. (குறள் 370).

(13) 'ஒன்றும்' என்னும் சொல், சிவனே என்னும் விளிச் சொல்லுடன் இயையும். இங்கு ஒன்றுதல், ஒப்பற்ற பொருளா

தலையும், இரண்டறக்கலந்து அத்து விதமாதலையும் உணர்த்தும். 'ஒன்றலா ஒன்றால் உளதாகி' எனவரும் சிவஞான போதத்தால் ஒன்று என்பது கடவுளுக்கே உரிய சிறப்புப் பெயராதல் அறியலாம்.

(14) 'திருப்பெருந்துறை' என்பது இங்கு அப்பெயர் கொண்ட தலத்தைமட்டும் குறியாமல், 'வேத நெறி தழைத் தோங்க மிகு சைவத்துறை விளங்க' என்றபடி, சைவ சமயம் அல்லது சைவ சித்தாந்தம் ஆகிய அருள்நெறிப் பெருந்துறை யினைக் குறிப்பதாகக் கொள்வதும் உண்டு. இப்பாடலைக் கொண்ட திருப்பதிகம், திருப்பெருந்துறையில் அருளிச் செய் யப்பெறாமல் தில்லையிலேயே அருளிச் செய்யப் பெற்றதாகக் கொண்டு, 'கோயிற்றிருப்பதிகம்' எனப்பெரியோர்களால் வழங் கப்பட்டு வருவதும், இங்கு நாம் நினைவுகூரத்தக்கது.

(15) 'ஒன்றும் நீ அல்லை' என்னும் தொடர், இறைவன் உயிர்ப்பொருள் உயிரில் பொருள்களில் எல்லாம் கலந்து நிற் பினும், அவற்றினுள் ஒன்றாகாமல் அவற்றையெல்லாம் கடந்த அதீத நிலையனாய் அப்பாற்பட்டு நிற்பன் என்பதனை உணர்த் திற்று.

(16) 'நீ அன்றி ஒன்று(ம்) இல்லை' என்னும் தொடர், உட லுக்கு உயிர்போலநின்று இறைவன் இயக்கினால் ஒழிய, உயிர்ப் பொருள் உயிரில் பொருளாகிய எவையும், தாமே இயங்கும் ஆற்றல் உடையன அல்லாமையைப் புலப்படுத்திற்று. 'அல்லை' 'இல்லை' என்ற சொற்களின் குறிப்பு மிக நுட்பமானதாகத் திகழ்கின்றது. 'அல்லை ஈது அல்லை ஈது' என மறைகளும் இறைவனை அன்மைச் சொல்லினாலேயே துதிக்கும். 'இன்மை' என்னும் சொல் இல்லாமையை (Non-existence) உணர்த் தாமல், முனைத்து நில்லாமை அல்லது விளங்கித்தோன்றாமையை உணர்த்துவதாகக் கொள்ளுதல் வேண்டும். 'யாவையும் சூனி யம் சத்தெதிர்' என்னும் சிவஞான போதவுரை காண்க.

(17) 'ஆர்உன்னை அறியகிற்பார்?' என்றது, உயிர்கள் தம்முடைய சுட்டறிவினால் இறைவனை அறிதல் இயலாது என் பதும், யானையின் துணைகொண்டே யானையின்மீது ஏறவேண்டு வதுபோல; இறைவனை அறிதற்கு அவனுடைய அருளையே

துணையாகப் பற்றல் வேண்டும் என்பதும் உணர்த்திற்று. 'தன்னறிவு அதனுற்காணும் தகைமையன் அல்லன் ஈசன்' என்பது சிவப்பிரகாசம்.

சான்ருேர் போற்றுரை :

இங்ஙனம் எண்ணி எண்ணி உணருந்தோறும் நுண்ணிய பல பொருள்களை உணர்த்தி நிற்பதனுல், இவ்வரிய இனிய இணையற்ற பாடலின் சிறப்பைச் சான்ருேர்கள் பலரும் உவந்து போற்றியுள்ளனர். சைவ சித்தாந்தப் பெருஞ் சான்ருேராகிய உமாபதி சிவம்,

பதிபசு பாச முதிரறி வுகளுடன்
ஆரு முன்னர்க் கூருப் பின்னர்
இருபொருள் நீத்துமற் ருெருநால் வகையும்
ஈனமில் ஞாதிரு ஞான ஞேயம் என்று
இசைய மூன்ருய்ப் பசுபதி யென்றவற்று
இரண்டா யிரண்டு மொன்றி ஞென்ருகத்
திரண்டாம் பயனெனுந் திருவருள் தெளியில்,
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்ரும்
என்றிறை யியற்கை யியம்புதல் தகுமே.

எனத் தாம் இயற்றிய சங்கற்ப நிராகரணம் என்னும் தத்துவப் பெருநூலில், இத் திருவாசகச் செய்யுளை மேற்கோளாக, இற்றைக்கு 600 ஆண்டுகளுக்கு முன்னரே எடுத்துக் காட்டிப் போற்றி யிருத்தல் காணலாம். அவ்வாறே வேதாந்த சித்தாந்த சமரச ஞானப் பெருஞ் செல்வராகிய தாயுமான சுவாமிகள்,

நினைப்பறவே தான்நினைந்தேன்
என்றநிலை நாடி
அனைத்துமாம் அப்பொருளில்
ஆகும்நாள் எந்நாளோ?
சென்றுசென் றணுவாய்த்
தேய்ந்துதேய்ந் தொன்ருகி
நின்றுவிடும் என்றநெறி
நிற்கும்நாள் எந்நாளோ?

என்று தம்முடைய திருப்பாடல்களில் விதந்து, வியந்து, புகழ்ந்து போற்றியிருத்தலும், இங்கு நாம் உணர்ந்து மகிழ்தற்குரியது.

இங்ஙனம் சான்றோர்கள் எல்லாரும் போற்றி ஓதி மகிழ்ந்திருத்தல் ஒன்றே, திருவாசகத்தின் தன்னிகரற்ற பெருஞ் சிறப்பை உணர்த்துதற்குப் போதிய சான்றாகும். ஆயினும் இத்தகைய சிறந்த திருவாசகத்தையும் ஒரு சிலர் எளிதாக எண்ணிப் பேசுவர். அதனால் திருவாசகத்திற்கு ஓர் இழுக்கும்இல்லை. திருவாசகத்தை ஓதியும் ஒரு சிறிதும் உருக்கம் அடையாத நெஞ்சம் உடையவர்கள் இருக்க நேருமாயின், அது திருவாசகத்தின் குறையாகாமல், அவர்களின் பண்படாத மன இயல்பினையே உணர்த்துவதாகும் (1). ஏனெனில்,

மலரினும் மென்மை கவிதை; சிலர்அதன்
செவ்வி தலைப்படு வார்

—திருக்குறள் தழுவல்

என்பது அறிஞர்கள் அனைவரும் கண்டறிந்த உண்மை (2). திருவாசகத்தினை இராமலிங்கர், சிவப்பிரகாசர், சிவஞான முனிவர், தாயுமானவர் போன்ற, எத்துணையோ பல்லாயிரக் கணக்கான மாபெரும் சான்றோர்களும் அருளாளர்களும் போற்றி ஓதி உய்ந்துள்ளனர் என்னும் உண்மையினை, நாம் நூல்கள் வாயிலாக அறிகின்றோம். எனவே, அத்தகைய அருட் பெருஞ் சான்றோர்கள் டலரின் அடிச் சுவட்டைப் பின்பற்றி, நாமும் திருவாசகச் செந்தமிழ் மாமறையினை இடையறாது ஓதி, இறையருள் பெற்று உய்ய முயலுவோமாக.

—ஆசிரியர்.



'திருக்கோயில்' ஆசிரியர் அனுமதி பெற்று இக்கட்டுரை பிரசுரிக்கப் படுகிறது.

திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## திருக்கழுக்குன்றம்

இனி, திருக்கழுக்குன்றம்:

பொழிப்புரை:- முற்பதிக வநுபூதியில் கண்ட இன்பம் திருவடி யன்றி வேறுண்டோ? வென, அதுவே தானும் தன்மை; எப்பதம், எவ்வுலகு, எவ்வுயிர், யாவையும் அப்படியே கண்ட திருவடி ஞான அன்பு உல்லாச அநுபூதி;

ஆசிரிய விருத்தமாகத் திருக்கழுக்குன்றத்தில் ஓதியதெனக் காண்க.

இனி, சத்திநிபாத உத்தமருள்ளத்தில் திருவடி உதயமானதைக் கூறும் (தி-ன):—

பிணக்கி லாதபெ ருந்து றைப்பெரு
மானுன் னாமங்கள் பேசுவார்க்
கிணக்கி லாததோ ரின்ப மேவருந்
துன்ப மேதுடைத் தெம்பிரான்
உணக்கி லாததோர் வித்து மேல்விளை
யாம லென்வினை யொத்தபின்
கணக்கி லாத்திருக் கோலம் நீவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே.

(இ-ள்) யாதொரு ஊறுபாடில்லாத திருப்பெருந்துறைப் பெருமானுன தேவரீர் திருநாமங்களைச் சீரடியார்கள் துதித்து அளவளாவுவார்கள்; இச்சைக்ககப்படாத அறிவின்பமாய் எழுந்தருளி, பிறவித் துன்ப வேரறுத்து, "அவாவென்ப, வெல்லா வுயிர்க்கும் தவாப்பிறப்பினும் வித்து," இனி திருவடி கண்டபின் விளையாமல், அடியேன மலபரிபாக சத்திநிபாத இருவினைச் சமமான காலம், அளவிலாத ஞானமே வடிவான திருவருளுருவை என்னறிவின் கண்களே கொள்ளை கொள்ள, காட்டறிவாய், என்னுள்ளே நின்றருளினதால் கண்டேன்: திருக்கழுக் குன்றத்திலே, என அருளியதைக் காண்க.

எனது போததேகம், திருக்கழுக்குன்றம் என்றது.

---

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை-திருவான்மியூர், மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலையத்தாரின் அனுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரூ. 13/- டி நூல் நிலையத்திலிடைக்கும், 20% கழிவு உண்டு.

# ஞானப்பழம்

புலவர், திரு. வே. அரசு அவர்கள்,
தமிழாசிரியர், எளச்சிபாளையம்.

(மலர் 18, இதழ் 11. பக்கம் 534ன் தொடர்ச்சி)

பின்னர்க் குமரகுருபரர் பாரதநாடெங்கும் சென்று சைவத் தொண்டும் தமிழ்த் தொண்டும் செய்து வாழ்ந்தார்.

நாவேறு பாமணத்த பாதார மேநினைத்து
நாலாறு நாலுபற்று வகையான
நாலாறும் ஆகமத்தின் நூலாய ஞானமுத்தி
நாடோறும் நானுரைத்த நெறியாக
நீவேறெ னாதிருக்க நான்வேறெ னாதிருக்க
நேராக வாழ்வதற்குன் அருள்கூர
நீடார்ச டாதரத்தின் மீதேப ராபரத்தை
நீகாணெ னாவெனை அருள்வாயே!

காலனிடத் தணுகாதே காசினியிற் பிறவாதே
சீலஅகத் தியஞானத் தேனமுதைத் தருவாயே
மாலயனுக் கரியானே மாதவரைப் பிரியானே
நாலுமறைப் பொருளானே நாககிரிப் பெருமாளே!

இவ்வாறெல்லாம் பாடுவதற்கு அருணகிரியாருக்கு அருள் புரிந்தது எது? ஞானப்பழமே யல்லவா? ஞான வடிவினனாகிய முருகனே ஞானப்பழரசத்தை அவருக்கு ஊட்டினான். தானுண்ட ஞானப் பழத்தின் பெருமையை – அருந்திச் சுவைகண்ட பழ ரசத்தின் இனிமையை மக்கள் எல்லாரும் உண்ணவும் சுவைக்கவும் வேண்டுமென்று கருதியே, அவர் காடுமேடு, நாடுநகரங்களெல்லாம் திரிந்து தனக்கு ஞானத் தேனமுதை வாரியளித்த திருமால் மருகனை – குகன் – அழகன், குமரன், முருகனைப் பத்தாயிரத்திற்கும் மேறபட்ட பாடலால் பாடினார்.

அவலமிகு வாழ்வி லலைந்தேன்; இனியும்
கவலைத் துயர்க்கடல் மூழ்கேன் எனக்கொண்
டுருகும் அருணகிரிக் கொண்புலமை யீந்த
முருகென்னும் ஞானப் பழம்.

திருவண்ணுமலையில் வாழ்ந்த அருணகிரிநாதருக்குத் திருச் செங்கோட்டு முருகப்பெருமான் செங்கோட்டு வேலவரிடத்திலே மிகுதியான பக்தி. செங்கோட்டு வேலவருடைய திருவுருவை நாமெல்லாம் போய்ப்பார்த்து வணங்குகிருேம். ஆனல், அங்கே நாம்காணும் காட்சிவேறு; பார்வைவேறு. அதே சமயத்தில் அருணகிரியார் காண்கின்ற காட்சி வேறு, பார்வை வேறு. அருணகிரிநாதர் அந்த அழகைக் கண்டு களிக்கத் தமக்கு இரண்டுகண்கள் போதவில்லையே. பிரமன் நாலாயிரம் கண் களைத் தரவில்லையே என்று வருந்துகின்ருர்.

மாயோன் மருகனை மன்ருடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெஞ்ஞான தெய்வத்தை மேதினியில்
சேலார் வயற்பொழில் செங்கோட னைச்சென்று கண்டுதொழ
நாலா யிரங்கண்படைத்திலனே யந்த நான்முகனே.

இவ்வாறு திருச்செங்கோட்டையும், செங்கோட்டு வேல வரையும் பல பாடல்களிலே பாடியிருக்கின்ருர். கந்தர் அனு பூதியிலே அவர்; தமக்கு ஞானத்தைத் தந்தது முருகப்பெரு மானின் கருணையே என்று பாடியுள்ளார்.

யாமோதிய கல்வி யும்எம் மறிவும்
தாமேபெற வேல வர்தந் ததனுல்

என்றும்,

அரிதா கியமெய்ப் பொருளுக் கடியேன்
உரிதா உபதேச முணர்த்தி யவா
விரிதா ரணவிக் ரமவே ளிமையோர்
புரிதா ரகநா கபுரந் தரனே

என்றும் கூறுகின்ருர்.

உலக அநுபவங்களும் இன்பதுன்ப நிலைகளும் கடந்து வாழ்வை வெறுத்தொதுக்கிவிட்ட அருணகிரியார்க்குத் திரு முருகன் அருள் கூட்டினுன்; திருவடி காட்டினுன்: கூர்வேல் காட்டி அச்சமழிய வழியும் காட்டினுன்; சேவலும் மயிலும் காணச்செய்தான்; கச்சையும் பூணும் கடம்ப மலர் மார்பும், செச் சைக் கண்ணியும், செங்கைவேலும், பன்னிருதோளும் பதும மலர் முகம் காண் என்று கட்டளையிட்டான். அப்பொழுது, அடிய னிருவினை தூள்படவே அயில்ஏவிய மயில்வாகனு! என்

ளிரு கண்களும் கண்டுகளிக்க என்முன்வருக; என் அஞ்ஞான போதம் அகற்ற வருக; முருகன்,குமரன்,குகனென்று மொழிந் துருகுஞ் செயல்தந்துணர்வு என்று அருள்வாய்? என்று வேண் டிக் கொண்டார்.

ஏறிநின்ருர் திருவருணைக் கோபுரத்துச்சியின் மேல்: கீழே விழுந்தார், தம்முடல் சிதைந்து சின்னமாகிவிடும் - அவலவாழ்வு அழிந்துபோகும்; சீழும் இரத்தமும் கசியும் இப்பிணவுடல் அற்று போகும் என்றெண்ணினர். ஆனல், உடனே, அருணகிரி யார்க்கு முன்வந்து தோன்றினன் - பெரும் பெயர் முருகன்; குறிஞ்சிக்கிழவனுகிய அழகன். அப்பெருமானது வடிவ அழ கிலே சொக்கிப்போய், தன்னைமறந்து அறிவும், அறிதத்து வமும், அபரிமித வித்தைகளும் உணர்வில் உணர்ந்த - கல்லா மலே கற்றஎந்தை அருணகிரியை நோக்கிக் கூர்வே லெறியும் குமரகன் - குமரப்பெருமான்,

"பாடுக நம்மைச் சந்தச் செந்தமிழால்" என்று பணித்த னன். அதுகேட்ட அண்ணல், "எட்டும் இரண்டு மறியாத எளியவன் யானென் சொல்லிப் பாடுகே னெந்தாய்?" என்று வேண்ட, அவருக்குச் செஞ்சாலிகஞ்ச மொன்ருய் வளர்ந்த செங் கோடமர்ந்த பெருமான்,

முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர - எனஓது

என்று கட்டளை பிறப்பித்தார். உடனே அருணகிரியாரும் தொடர்ந்து பாடினர். அவர் வாக்கிலே புரண்டன திருப்புகழ் பல்லாயிரக் கணக்கிலே. பண்ணமைந்த பலபாடல்கள் பாடி ஞர். வாக்கிற் கருணகிரி என்று போற்றப்பட்டார்.

இவ்வாறு, பலருக்கும் ஞான ரசத்தை வாரி வாரி வழங்கிய முருகன், ஞானத்தின் மேலான நிலையில் விளங்குகின்ற தந்தை சிவபெருமானுக்கே ஞானமொழியாகிய ஓம் என்னும் சொற் பொருளை உணர்த்தினர். முருகப் பெருமானின் ஆறு திருமுகங் களிலே ஒன்று ஈசருடன் ஞானமொழி பேசும் முகமாக விளங் குகின்றது. ஞானப்பழமாக - ஞான பண்டிதனுக ஒளிரும் முருகப் பெருமான் தந்தைக்குபதேசம் செய்து தகப்பன் சாமியாக - குரு நாதனுக - யாவரும் தொழும் பரம்பொருளாக விளங்கினர்.

(தொடரும்)

## நரசிங்கமுனையரையர் நினைவு வாரணசியில் புரட்டாசி மாச அன்னம்பாலிப்பு முதற்பொருள் ரூ. 3000/-

பெருவளத்தில் சிறந்த திருமுனைப்பாடி நாடாளும் காலவரும், மணிகண்டர் திருநீறே மனம் கொண்டவரும், சிகாயில் தோறும் திருச்செல்வம் பெருக்கியவரும், சிவத்தொண்டு கனவிலும் வழுவாது ஆற்றியவரும், நீறணியும் தொண்டர் அணைத்தார்க்கெல்லாம் நிகழ் பசும்பொன் நீறு குறையாமல் அளித்து இன்னமுது நுகர்வித்தவரும், சுந்தரமூர்த்தி சுவாமிகளை இளமைப்பருவத்திலேயே அரசிளங்குமரற் கேற்ப அன்பினுல் மகன்மைகொண்டு அருமறை முந்நூல்சாத்திச் சிறப்பித்தவரும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாம் அருளிய திருத்தொண்டத் தொகையில் மெய்யடியான் நரசிங்கமுனையரையர் என்று சிறப்பித்த மெய்யடியாரும், புரட்டாசிச் சதயநாளில் செக்கர் நெடுஞ்சடைமுடியார் பாதமலர் நிழல் சேர்ந்தவரும் ஆகிய நரசிங்கமுனையரைய நாயனுரை நினைவுகூர்ந்து வாரணசியில் புரட்டாசி மாதம் முழுவதும் பின் மூன்ருவது பாராவில் குறிப்பிட்டவண்ணம் அந்தணர்களுக்கு அன்னம்பாலித்தற் பொருட்டு இத்தருமம் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்றது. இது 'நரசிங்கமுனையரையர் நினைவு வாரணசியில் புரட்டாசி மாச அன்னம்பாலிப்பு' எனப் பெயர் பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ. 3000/- / ரூபா மூவாயிரம்/ இது ஆண்டொன்றுக்கு 7% வட்டி தரக்கூடிய நிலையான முதலீடாகக் கும்பகோணம் ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவில் முதலீடு செய்யப்பெற்றுள்ளது. பிக்சட் டிபாஸிட் நெ. 076124- ரூ. 3000/- தேதி 19-7-1967 - 60 மாதங்கள் - இது நம்மாலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலனம் செய்யப்பெற்று வரும்.

3. இம்முதற்பொருளினின்று கிடைக்கும் வட்டித்தொகையில் இத்தருமத்தை நிர்வகிப்பதற்குரிய நடைமுறைச்செலவு போக எஞ்சியுள்ள தொகை முழுவதும் ஸ்ரீ காசியில் / வாரணசியில் / நமக்குச் சொந்தமான ஸ்ரீ குமாரசுவாமி மடத்தில் நம்

மால் நிறுவப்பெற்றுள்ள மற்றத் தரும நிதிகளின்படி நாடோறும் நடத்தப்பெற்று வரும் அன்னம்பாலிப்புடன், புரட்டாசி மாத முழுவதும், நாடோறும் அந்தணர்களுக்கு அன்னம் பாலிப்பு நடத்தப் பயன்படுத்தப்பெறும்.

4. வட்டி வரவுக் கேற்பவும், கால விலைக்கேற்பவும் நம்மால் தயாரிக்கப்பெறும் திட்ட ஜாப்தாவின்படி இவ்வன்னம் பாலிப்பு நடத்தப்பெற்று வரும்.

5. இத்தருமம் வேறு எம்முறையிலும் மாற்றியமைக்கப் பெறமாட்டாது. இம்முதற்பொருள் நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்துவரும். இம்முதற்பொருள் திரும்பியளிக்கப்பெறின் அதிக வட்டி வரக்கூடிய அரசியல் கடன்தாள்களிலோ அல்லது நிலையான முதலீடுகளிலோ முதலீடு செய்யப்பெறும்.

Tirupanandal
Dated 26-7-1967 } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*



Registered at Tiruvadamarudhur Sub Registrar's office on 28-7-67 as No. 31 of 1967. Book No. 4 volume No. 54, pages, 61 to 63.

உ

திருப்பனந்தாள் – ஸ்ரீ காசி மடம்

# ‘ திருமுறை வெளியீடுகள் ’

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை (அச்சில்) ... | | |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | 3 | 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 | 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம்(மூலம் மட்டும் புதிய பதிப்பு) | 2 | 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் .. ... | 2 | 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் .. ... | 1 | 30 |
| 7* | திருவாசகம் (புதிய பதிப்பு) ... | 0 | 65 |
| 8 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிச்செய்த காசிக் கலம்பகம் மூலமும் அரும்பதக்குறிப்பும் ... | 0 | 40 |
| 9 | .. சிதம்பர மும்மணிக்கோவை மூலமும் அரும்பதக்குறிப்பும் ... | 0 | 20 |
| 10 | ஒன்பதாம் திருமுறை–திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் தெளிவுரை ... | 1 | 50 |
| 11 | .. .. மூலம் மட்டும் ... | 0 | 56 |
| 12* | பதினோராந் திருமுறை (புதிய பதிப்பு) .. ... | 1 | 50 |
| 13* | பெரியபுராணம் (மூலம் மட்டும்) ... | 3 | 00 |
| 14 | பெரியபுராணம் (உரை நடை) ... | 2 | 00 |
| 15 | திருத்தொண்டர் புராணச்சாரம் ... | 0 | 40 |
| 16* | அகத்தியர் தேவாரத் திரட்டு ... | 0 | 36 |
| 17 | திருவிளையாடற் புராணம் (மூலம் மட்டும்) ... | 3 | 00 |
| 18 | திருவிளையாடற்புராணம் உரை நடை ... | 2 | 25 |
| 19 | கந்தபுரா்ணச் சுருக்கம் (மூலம் மட்டும்) ... | 1 | 75 |
| 20 | கந்தபுராணம்-முதல் மூன்று காண்டங்கள்(மூலம்மட்டும்) | 2 | 75 |
| 21 | .. யுத்த தேவ காண்டம் ... | 2 | 00 |
| 22 | .. தக்ஷகாண்டம் ... | 1 | 50 |
| 23 | கந்தபுராண உரைநடை .. ... | 3 | 00 |
| 24 | திருக்குறள் அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் ... | 1 | 50 |
| 25 | திருக்குறள்-பொருட்பால் .. ... | 2 | 50 |
| 26 | திருக்குறள் - காமத்துப்பால் .. ஷை 24, 25, 26 திருக்குறள் 3புத்தகமும் ... | 4 | 00 |
| 27 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் (அச்சில்) | | |
| 28 | தாயுமானசுவாமிகள் பாடல் குறிப்புரையுடன் ... | 1 | 25 |
| 29 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) ... | 0 | 25 |
| 30 | திருக்கைலாய ஞானவுலா–உரையுடன் ... | 0 | 50 |
| 31 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் ... | 0 | 25 |
| 32 | கந்தரனுபூதி மூலம் (அச்சில்) | | |
| 33 | கந்தரனுபூதி தெளிவுரை ... | 0 | 35 |
| 34 | கந்தர்கலி வெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புகளுடன் (அச்சில்) | | |
| 35 | கந்தர்கலி வெண்பா மூலம் மட்டும் ... | 0 | 10 |
| 36 | கந்தர்கலி வெண்பா மூலமும் உரையும் (அச்சில்) | | |
| 37 | நீதிநெறி விளக்கம் - ஆங்கிலமும், ஹிந்தியும் ... | 0 | 50 |
| 38 | நீதிநெறி விளக்கம் – மூலம் ... | 0 | 10 |
| 39 | நீதிநெறி விளக்கமும் நன்னெறியும்–மூலம் ... | 0 | 15 |
| 40 | [illegible] ... | 0 | 37 |

Registered With the Registrar of Newaspapers for India
Under No. R. No. 1485/57.

Regd. No M. 5574 குமரகுருபரன்

| | | |
|---|---|---|
| 41 | திருக்குறள்-பொருட்பால்-பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் ... | 0 1[illegible] |
| 42 | திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பா-மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்-மதுரைக்கலம்பகம்-நீதிநெறி விளக்கம்-மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை மதுரை மீனாட்சியம்மை குறம் ... | 2 75 |
| 43 | திருவாரூர் நான்மணிமாலை-முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் ... | 1 2[illegible] |
| 44 | சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச்செய்யுட் கோவை தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | 1 00 |
| 45 | பண்டார மும்மணிக்கோவை-காசிக்கலம்பகம் சகலகலாவல்லி மாலை ... | 1 00 |
| 46 | சிதம்பரச் செய்யுட்கோவை ... | 0 75 |
| 47 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் ... | 0 50 |
| 48 | திருவருட்பயன் மூலம் இந்தி. ஆங்கில மொழிபெயர்ப்புடன் | 1 00 |
| 49 | திருக்கயிலைத் திருமுறை ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் ... | 0 19 |
| 51 | சென்திலாண்டவன் மகிமை ... | 0 15 |
| 52 | திருக்குறள்-உரைக்கொத்து-அறத்துப்பால் 3-ம் பதிப்பு | 1 37 |
| 53 | ௸ ௸ பொருட்பால் 2-ம் பதிப்பு | 2 75 |
| 54 | இந்து நீதி நூல்கள் ... | 0 1[illegible] |
| 55 | ஸ்ரீ சயிலம் ... | 0 1[illegible] |
| 56 | திருவாசகம் குறிப்புரையுடன் (விஷய சூசனத்துடன்) பழைய பதிப்பு ... | 1 5[illegible] |
| 57 | திருவாரூர்-திருப்பனுவல்கள் ... | 0 1[illegible] |
| 58 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி ... | 0 10 |
| 59 | பழமொழித்திருமுறை ... | 0 25 |
| 60 | திருவாரூர் நான்மணிமாலை ... | 0 50 |
| 61 | Hymns and Proverbs ... | |
| 62 | அப்பர்விழா வெளியீடு ... | 0 2[illegible] |
| 63 | நவக்கிரகமாண்பு ... | 0 25 |
| 64 | குமரகுருபரர் வரலாறும், அற்புதத்தேவாரத் திரட்டும் ... | 0 30 |

மேலே கண்ட நூல்கள் இடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.

"தியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோவில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை-5

குறிப்பு:- • இக்குறிப்பிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்

அச்சிட்டது:- குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம்-67.